# गङ्गाष्टकम्

# கங்காஷ்டகம்

(1)

भगवति भवलीलामौलिमाले तवांभः –
कणमणुपरिमाणं प्राणिनो ये स्पृशन्ति ।
अमरनगरनारीचामरग्राहिणीनां
विगतकलिकलङ्कातङ्कमङ्के लुठन्ति ॥

பகவதி பவலீலாமௌலிமாலே தவாம்ப:-
கணமணுபரிமாணம் ப்ராணிநோ யே ஸ்ப்ருசந்தி!
அமரநகர நாரீ சாமரக்ராஹிணீநாம்
விகதகலி கலங்காதங்கமங்கே லுடந்தி!!

*பகவான் பரமேச்வரனின் அலங்கார ஜடையில் மாலைபோல் இருக்கும் கங்கையே! உனது சிறிது அளவு தண்ணீரை எவர் பருகுகிறார்களோ, தொடுகிறார்களோ, அவர்கள் தேவலோக சுகம் பெறுவர் (கலிகல்மஷம் பாதிக்காமல்)*

(2)

ब्रह्माण्डं खण्डयन्ती हरशिरसि जटावल्लिमुल्लासयन्ती
स्वर्लोकादापतन्ती कनकगिरिगुहागण्डशैलात्स्खलन्ती ।
क्षोणीपृष्ठे लुठन्ती दुरितचयचमूर्निर्भरं भर्त्सयन्ती
पाथोधिं पूरयन्ती सुरनगरसरित्पावनी नःपुनातु ॥

ப்ரஹ்மாண்டம் கண்டயந்தீ ஹரசிரஸி
ஜடாவல்லி முல்லாஸயந்தீ
ஸ்வர்லோகாதாபதந்தீ கனககிரி
குஹா கண்ட சைலாத் ஸ்கலந்தீ!
க்ஷோணீப்ருஷ்டே லுடந்தீ துரிதசயசமூ:
நிர்பரம் பர்த்ஸயந்தீ
பாதோதிம் பூரயந்தீஸுர நகரஸரித்
பாவநீ ந: புனாது!!

ப்ரும்மாண்டத்தை உடைத்துக்கொண்டும், ஸ்ரீபரமேச்வரனின் ஜடாவல்லியை கிளு கிளுக்கச் செய்து கொண்டும், ஸ்வர்க்கத்திலிருந்து கீழே இறங்கி மேருமலைக்குகையின் பக்கத்து குன்றிலிருந்து விழுந்தோடி பூமியில் புரண்டு, மக்களின் பாப பட்டாளத்தை விரட்டியடித்து, பின் சமுத்ரத்தில் கலந்து நிரப்பிக்கொண்டுமிருக்கிற புண்யகங்கை நம்மை பரிசுத்தப் படுத்தட்டும்.

(3)

मज्जन्मातङ्गकुम्भच्युतमदमदिरामोदमत्तालिजालं
स्नानैःसिद्धाङ्गनानां कुचयुगविगलत्कुङ्कुमासङ्गपिङ्गम्।
सायं प्रातर्मुनीनां कुशकुसुमचयैश्छन्नतीरस्थनीरं
पायान्नो गाङ्गमम्भः करिकरमकराक्रान्तरंहस्तरङ्गम्॥

மஜ்ஜந் மாதங்க கும்பச்யுத மதமதிரா
மோத மத்தாலிஜாலம்
ஸ்நாநை:ஸித்தாங்கநாநாம் குசயுக விகலத்
குங்குமாஸங்க பிங்கம்।
ஸாயம் ப்ராதர்முனீநாம் குசகுஸுமசயை:
சன்ன தீரஸ்தநீரம்
பாயாத் நோ காங்கமம்ப: கரிகர மகரா
க்ராந்த ரம்ஹஸ்தரங்கம்॥

யானை தும்பிக்கையும், முதலைகளும் அலை வேகத்தை சற்றே தடுக்க, ஓடும் கங்கை ப்ரவாஹம் நம்மை காப்பதாக! அது, மூழ்கும் யானைகளின் காதோரமத ஜலப்பெருக்கால் வாசனை பெற்றதால் வண்டு மொய்க்கும் தண்ணீரையுடையது; குளிக்கும் சித்தர் பெண்களின் மார்பகத்திலிருந்து குங்குமம் கரைந்து மஞ்சள் நிறமுள்ளது; காலை மாலை வேளைகளில் முனிவர் பூஜை செய்வதால், தர்பை, புஷ்பம் ஆகியவை கரையோரம் தண்ணீரில் மிதக்கின்றன.

(4)

आदावादिपितामहस्य नियमव्यापारपात्रे जलं
पश्चात्पन्नगशायिनो भगवतः पादोदकं पावनम् ।
भूयःशंभुजटाविभूषणमणिर्जह्नोर्महर्षेरियं
कन्या कल्मषनाशिनी भगवती भागीरथी पातु माम् ॥

ஆதௌ ஆதிபிதாமஹஸ்ய நியம
வ்யாபாரபாத்ரே ஜலம்
பஸ்சாத் பன்னகசாயினோ பகவத:
பாதோதகம் பாவனம்!
பூய: சம்புஜடா விபூஷணமணி:
ஜஹ்நோர்மஹர்ஷேரியம்
கன்யா கல்மஷநாசினீ பகவதீ
பாகீரதீ பாது மாம்!!

முதலில் பிரம்மதேவன் செய்யும் அனுஷ்டான பாத்திரத்தில் சுத்தஜலமாகவும், பிறகு, சேஷசாயியான ஸ்ரீமந்நாராயணரின் பாதோதகமாகவும், பின்னும், பரமேச்வரன் ஜடா மகுடத்தில் அலங்காரமணியாகவும் திகழ்ந்த ஜஹ்னுமஹர்ஷியின் மகளான கங்கை பாபத்தைப் போக்கி என்னை காக்கட்டும்.

(5)

शैलेन्द्रादवतारिणि निजजले मज्जज्जनोत्तारिणि
पारावारविहारिणि भवभयश्रेणीसमुत्सारिणि ।
शेषाहेरनुकारिणि हरशिरोवल्लीदलाकारिणि
काशीप्रान्तविहारिणि विजयते गङ्गा मनोहारिणि ॥

சைலேந்த்ரா தவதாரிணீ நிஜஜலே
மஜ்ஜத் ஜனோத்தாரிணீ।
பாராவாரவிஹாரிணீ பவபயச்ரேணீ
ஸமுத்ஸாரிணீ।
சேஷாஹேரனு காரிணீ ஹரசிரோ
வல்லீதலாகாரிணீ
காசிப்ராந்த விஹாரிணீ விஜயதே
கங்கா மநோஹாரிணீ॥

காசியருகில் ஒடி விளையாடும் அழகிய கங்கை ஹிமயமலையில் உற்பத்தியாகி, தனது ஜலப்ரவாஹத்தில் மூழ்கிய ஜனங்களை உய்வித்து, சம்சாரபயம் நீக்கி, கடலோடு கலக்கிறது. அது ஆதிசேஷன் போல், பரமேச்வரன் தலையில் பில்வதளம் போல் விளங்குகிறது.

(6)

कुतो वीची वीचिस्तव यदि गता लोचनपथं
त्वमापीता पीताम्बरपुरनिवासं वितरसि।
त्वदुत्सङ्गे गङ्गे पतति यदि कायस्तनुभृतां
तदा मातः शातक्रतवपदलाभोऽप्यतिलघुः॥

குதோவீசீ வீசிஸ்தவ யதி கதா லோசனபதம்
த்வமாபீதா பீதாம்பர புரநிவாஸம் விதரஸி!
த்வதுத்ஸங்கே கங்கே பததி யதி காயஸ்தனுப்ருதாம்
ததா மாதச் சாதக்ரதவபதலாபோஃப்யதிலகு:!!

ஹே கங்கைத்தாயே! உனது தண்ணீர் அலை கண்ணில் பட்டு விட்டாலே போதும் வீழ்ச்சி கிடையாது, சற்று பருகினாலே வைகுண்ட லோக வாஸத்தை அருளுகிறாய், உனது பிரவாஹத்தில் ஸ்னானம் செய்தவருக்கு இந்திரபதவி கூட எளிதாயிற்றே!

(7)

भगवति तव तीरे नीरमात्राशनोऽहं
विगतविषयतृष्णः कृष्णमाराधयामि।
सकलकलुषभङ्गे स्वर्गसोपानसङ्गे
तरलतरतरङ्गे देवि गङ्गे प्रसीद॥

பகவதி தவ தீரே நீரமாத்ராசனோஃஹம்
விகத விஷய த்ருஷ்ண: க்ருஷ்ணமாராதயாமி!
ஸகல கலுஷபங்கே ஸ்வர்கஸோபானஸங்கே
தரளதர தரங்கே தேவி கங்கே ப்ரஸீத!!

ஹே கங்காதேவி! பகவதி! மினுமினுப்பான அலைகள் கொண்டவளே! ஸகலபாபங்களையும் அகற்றுபவளே! ஸ்வர்க்கத்தின் படிக்கட்டாக அமைந்தவளே! எனக்கு மனமிரங்க மாட்டாயா? உனது கரையோரம் உன் நீரைமட்டும் பருகிக் கொண்டு, பற்று அற்றவனாய், ஸ்ரீகிருஷ்ணனை ஆராதிக்கிறேனே! அனுமதியேன்.

(8)

मातर्जाह्नवि शंभुसङ्गमिलिते मौलौ निधायाञ्जलिं
त्वत्तीरे वपुषोऽवसानसमये नारायणाङ्घ्रिद्वयम् ।
सानान्दं स्मरतो भविष्यति मम प्राणप्रयाणोत्सवे
भूयाद्भक्तिरविच्युता हरिहराद्वैतात्मिका शाश्वती ॥

மாதர் ஜாஹ்னவி சம்புஸங்கமிலிதே மௌலௌ நிதாயாஞ்ஜலிம்
த்வத்தீரே வபுஷோஃவஸானஸமயே நாராயணாங்கரித்வயம்!
ஸாநந்தம் ஸ்மரதோ பவிஷ்யதி மம ப்ராணப்ரயாணோத்ஸவே
பூயாத் பக்திரவிச்யுதா ஹரிராத்வைதாத்மிகா சாச்வதீ!!

கங்காமாதாவே! ஸ்ரீசங்கரரின் தொடர்புடையவளே! உன்னை பிரார்த்திக்கிறேன் - உனது கரையில் தங்கி தலை மேல் கைகூப்பிக்கொண்டு, உடல் பட்டுப்போகும் நேரத்தில் ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளை தியானித்துக்கொண்டு ஆனந்தமாய் கழிக்கும் நேரம் பிராணவியோகமும் நேரலாம். அப்பொழுது, ஹரியும், ஹரனும் ஒன்று, என்ற அசையாத (நிலையான) பக்தி எனக்கு உண்டாக வேண்டுமே.

(9)

गङ्गाष्टकमिदं पुण्यं य:पठेत्प्रयतो नर:
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोकं स गच्छति ॥

கங்காஷ்டகமிதம் புண்யம் ய: படேத் ப்ரயதோ நர:!
ஸர்வபாப விநிர்முக்தோ விஷ்ணு லோகம் ஸ கச்சதி!!

புண்ணியமான இந்த கங்காஷ்டகத்தை சித்த சுத்தியுடன் படிப்பவர் பாபமெல்லாம் நீங்கி விஷ்ணு லோகம் எய்துவர்.

கங்காஷ்டகம் முற்றிற்று.